Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 173

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 120 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்களுரைத்தவைகள் தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருது௵ வைகாசி௴ 1963௵ மே-ஜூன்௴

# ஸ்ரீ ராமாநுஜன் 173.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஞு மே & ஜூன்மீ<br>சோபகிருதுஞு வைகாசிமீ | ஸஞ்சிகை 5 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி — 62.

கங்குல் பகலரதி கைவிஞ்சி மோகமுற*
அங்கதனைக் கண்டோ ரரங்கரைப் பார்த்து—*இங்கிவள்பால்
என்செய நீ ரெண்ணுகின்ற தென்னு நிலை சேர்மாறன்*
அஞ்சோலுற நெஞ்சுவெள்ளை யாம்.

| | |
|---|---|
| கங்குல் பகல் | —இரவிலும் பகலிலும் |
| அரதி கைவிஞ்சி | —ஆற்றாமை அதிகப்பட்டு |
| மோகம் உற | —(ஆழ்வார்) மோஹ மடைந்திட, |
| அங்கு அதனை கண்டோர் | அந்த நிலைமையைப் பார்த்த திருத்தாயார் |
| அரங்கரை பார்த்து | ஸ்ரீரங்கநாதனை நோக்கி |
| இங்கு இவள்பால் என் செய நீர் எண்ணுகின்றது என்னும் நிலை சேர் மாறன் | 'இத்தகைய நிலைமையில் இவள் திறத்து நீர் செய்ய நினைத்திருப்பது என்ன?' என்று கேட்க வேண்டும்படியான அவஸ்தையையடைந்த ஆழ்வாருடைய |
| அம் சொல் உற | —ஸ்ரீஸூக்தியை யநுஸந்திக்க |
| நெஞ்சு வெள்ளை ஆம் | ஹ்ருதயம் பரிசுத்தமாகும். |

கீழ்த் திருவாய்மொழியாகிய *உண்ணிலாவிய பதிகத்தி லுண்டான தளர்ச்சியானது மிகவும் அதிகரித்து உணர்த்தி யழிந்து மூர்ச்சிக்கும்படியான நிலைமை நேர்ந்தவளவிலே, "கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கி" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்திப்படியே பராங்குச நாயகியைத் திருத்தாயார் கோயில் திருவாசலிலே யிட்டு வைத்து, பெரியபெருமாளே! இப்பெண்பிள்ளை திறத்து நீர் செய்ய நினைத்திருப்பது யாது? இப்படி இவளைக் கைவிடுகை தருமமோ?' என்று கேட்கிறபடியாய்ச் சென்றது *கங்குலும் பகலும் பதிகம்.

கீழே ஆறும் பத்தின் ஈற்றுத் திருவாய்மொழியில்—பெரியபிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுந்தவிடத்திலும் ஆழ்வார் தாம் எம்பெருமானுடைய திருவடிவாரத்திலே சென்று நிற்கக் கண்டிலர். இன்னமும் இந்த ப்ராக்ருதி மண்டலத்திலேயே தம்மைக் கண்டார். சப்தாதி விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே தன் பக்கலில் நின்றும் நம்மை அகற்றப் பார்த்தானன்றோ வென்று கருதிப் புலியின் வாயிலே அகப்பட்டாப்போலே கூப்பிட்டார் கீழ் உண்ணிலாவிய பதிகத்திலே. இந்த ஆர்த்தியை எம்பெருமான் அறியாதவனல்லன்; "எப்படியும் இவர்க்கு நாம் பேறு பெறுவிப்பது திண்ணம்; இவர் அங்கே வந்து செய்யும் காரியத்தை இங்கேயிருந்து தான் செய்யட்டுமே" என்றிருந்தானவன். மக்களைப்

பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே 'இவ்வாழ்வார் தாம் சாலு நாள் நோவுபட்டாராகில் படுகிறார்; இவருடைய திவ்யப் பிரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்' என்றிருந்தான். இவர் ஒரு நொடிப்பொழுது இங்கிருந்தாலும் எம்பெருமான் தன்னாலும் திருத்தவொண்ணாத ஸம்ஸாரம் எவ்வளவோ திருந்தி வாழும்படியாயன்றோ விருப்பது. அதற்காகவே இவரை இங்கு வைத்தான் அவன். "அந்தோ! இக்கொடுவுலகத்தில் இருப்புப் பொருந்தாத நம்மைக் கொண்டோ இவன் காரியம் நிர்வஹிக்கப் பார்ப்பது! இந்நிலத்தில் இருப்புப் பொருந்துவார் பலருண்டே; அன்னவர்களில் ஆரேனுமொருவரைக் கொண்டு காரியம் பார்க்கலாகாதோ!" என்று துடிக்கிறார் ஆழ்வார். இங்கு இருப்புப் பொருந்தாதாரைக் கொண்டே காரியம் பார்க்கவேணும் என்பதே எம்பெருமானுடைய பிடிவாதமாயிற்று. இப்படி எம்பெருமானைப் பிரிந்து துடிக்கவேண்டிய தாயிற்றே யென்று நிலைகலங்கின ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து தமது பரிதாபத்தைத் தம் வாயாலே சொல்லகில்லாதாராய் தாய் சொல்லவேண்டும்படியான தளர்த்தியுண்டாக, திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது * சங்குவும் பசலும் திருவாய்மொழி.

திருத்தாயார் இப்பராங்குச நாயகியைப் பெரியபெருமாள் [ஸ்ரீரங்கநாதர்] திருவடியிலே யிட்டு வைத்துக் கொண்டிருந்து இவள் அழுவது தொழுவது மோஹிப்பது பிரலாபிப்பது அடைவுகெடப் பேசுவது நெடுமூச்செறிவது அதுவும் மாட்டாதொழிவது ஸ்தப்தையாயிருப்பது முதலியவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லி இவள் திறத்திலே நீர் என் செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறீர்? என்று கேட்கிறபடியாய்ச் செல்லுகிறதாயிற்று.

நம்பிள்ளையீடு ;—" இத் திருத்தாயாரும் ஸர்வபரங்களையும் அவர் தலையிலே பொகட்டுப் பெண்பிள்ளையைத் திருமணத் தூணுக்குள்ளேயிட்டு அவருடைய அசரண்ய சரண்யத்வாதி குணங்களை விண்ணப்பஞ் செய்யாநின்று கொண்டு, ஒரு காலநியதியாதல் ஒரு தேசநியதியாதல் அதிகாரி நியதியாதலின்றிக்கே ஸர்வஸமாச்ரயணீயரா யிருக்கிறபடியை யநுஸந்தித்துத் தன் பெண்பிள்ளையினுடைய தசையைத் திருவுள்ளத்திலே படுத்துகிறாள் இத்திருவாய்மொழியாலே."

"பட்டர் இத்திருவாய்மொழி அருளிச் செய்யும்போதெல்லாம் 'ஆழ்வார்க்கு ஓடுகிற தசை யறியாதே அவருடைய ஸாவவ்ருத்தியு மின்றிக்கே யிருக்கிற நாம் என் சொல்லுகிறோம்! என்று திருமுடியிலே கையை வைத்துக் கொண்டிருப்பர்." .... .... (*)

## காலஞ்சென்ற மயிலை மாதவதாஸரைப் பற்றி.

ஸ்ரீராமாநுஜன் 171 இதழில் ஆழ்வார்களின் அவதார கால நிர்ணய விஷயமான வியாஸம் எழுதப்படுகையில் நாலாயிர திவ்யப்பிரபந்தப் பதிப்பாளரான மயிலை மாதவ தாஸரைப் பற்றின ப்ரஸ்தாவம் வந்தபோது "இவர் ஸ்மார்த்த ப்ராஹ்மணர்" என்றெழுதியிருந்தோம். அப்பெரியவர் பிராமணரல்லாதாரென்பதைப் பல நண்பர்கள் தெரிவித்தார்கள். அவர் ஜீவித்திருந்த காலத்தில் அவர்க்கும் நமக்கும் கடிதப் போக்குவரத்து ஸ்வல்பமாக இருந்ததெனினும் அவருடைய ஜாதியைப்பற்றி நாம் தெரிந்து கொள்ள ப்ரஸக்தியில்லாமலிருந்தது. சிலர் சொல்லக் கேட்டதையே கொண்டு அவரை ஸ்மார்த்த ப்ராஹ்மணரென்றெண்ணியிருந்தபடியே நாம் எழுத நேர்ந்தது. அவரை நேரில் அறிந்திருந்த பல நண்பர்கள் 'அவர் பிராமணரல்லாதவர்; முதலியார் வகுப்பினரைச் சேர்ந்தவர்' என்று தெரிவிப்பதனால் நாம் மாறுபடக் கருதியிருந்ததை மாற்றிக் கொண்டோம் என்பதை இதனால் தெரிவித்துக் கொண்டபடி. ... .... .... (*)

# சந்தா செலுத்திய பெரியார்கள்.

இவ்வருஷத்தில் ஜனவரி மாதத்திலிருந்து இன்றுவரையில் சந்தாத் தொகை செலுத்தியவர்களை இதன் கீழே குறிப்பிடுகிறோம். செலுத்தாதவர்களும் விரைவில் செலுத்துமாறு பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

1 ஸ்ரீ உ. வே. வை. மு. நரஸிம்ஹாசாரியார், திருவல்லிக்கேணி. ஜீவியச் சந்தா 100 ரூ. செலுத்தி, நாம் முகப்பில் வெளியிட்டிருக்கிறபடி 120 ரூ. விலையுள்ள புத்தகங்கள் பெற்றார்.

2 சேலம் கோடா. ஜி. லக்ஷ்மணன் செட்டியா ரவர்களும் அப்படியே.

3 K. V. ராகவாசாரியர், Auditor, Katpadi town ship. அவர்களும் அப்படியே.

4 ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஆழ்வார் திருநகரி எம்பெருமானார் ஜீயர் ஸ்வாமிகள் வருடச் சந்தா.
5 ஆழ்வார் திருநகரி. ஸ்ரீமதி. ரெங்கம் ஜானகியம்மாள் ஷை
6 ,, ஸ்ரீ. உ. வே. பண்டிட். ஸுதர்சன ராமாநுஜய்யங்கார் ஷை
7 ஆமூர் கோபாலையங்கார்
8 பரமபாகவத ஆத்தூர். கேசவுலு நாயுடு
9 அச்சங்தவிழ்த்தான் A.S. அப்பனையங்கார்
10 அம்ருதூர் ஜமீன்தார் A. R. வெங்கடாசாரியர்
11 Sri C. V. Rajan, Bangalore.
12 பெங்களூர் மல்லேச்வரம் S. திருவேங்கடத்தய்யங்கார்
13 S. ரங்கராஜய்யங்கார், (Now Madurai)
14 அனக்காவூர் கிருஷ்ணஸாமி ஐயங்கார்
15 ஸ்ரீமதி ஸரோஜினியம்மா, பெங்களூர்
16 N. வீரராகவன் அவர்கள் செங்கற்பட்டு
17 தங்கவிலாஸ் லக்ஷ்மிதேவியம்மாள் ,,
18 K. S. S. Ramanujam, Calcutta
19 C. R. Ramaswami Ayengar, B.A.B.L. Coimbatore.
20 B. வரதாசாரியர், கொடி கோவில், ,,
21 சித்தூர் மஹாலக்ஷ்மி இண்டஸ்டிரியல் ப்ரொப்ரைடர்.
22 S. R. நாராயண ஐயங்கார், K. G. F.
23 தமிழ்ப் புலவர் N. சுப்பராயப் பிள்ளை, காட்டுமன்னார் கோவில்
24 R. செந்தாமரைக்கண்ணனையங்கார், Mettoordam.
25 T. S. ராஜகோபாலாசாரியர், முடிகொண்டான்.
26 டாக்டர் V. சேஷராமாநுஜய்யா, மதுரை
27 அழகுராமாநுஜம், ,,
28 S. A. ஸ்ரீநிவாஸராமாநுஜம், மன்னார்குடி
29 பார்த்தஸாரதி ராமாநுஜதாஸர், மணியக்காரனூர்
30 டாக்டர் C. ராமையங்கார், நெல்லூர்
31 K. V. துரைஸாமி ஐயங்கார், நெல்லூர்
32 C. வெங்கடாசாரியர் ஸ்வாமி, நெல்லூர்
33 N. வேணுகோபால நாயகர், B.A. B.L., New Delhi.
34 ஜ்யோதிர் பூஷணம் வங்கீபுரம். ராஜமையங்கார், நன்னிலம்.
35 K. கோவிந்தஸாமிப் பிள்ளை, நாரணமங்கலம்
36 R. ஜகன்னாதய்யங்கார், பாண்டிச்சேரி.
37 S. குப்புஸ்வாமி ஐயங்கார், பள்ளத்தூர்
38 K. Rangaswami Ayengar, Advocate, Poonamalli.
39 கூரம். திருநாராயணய்யங்கார், பண்டரிபூர்
40 ஸ்ரீவில்லிபுத்தூர் சிறுபுலியூர் ஸ்வாமிகள்
41 ஸ்ரீமத் பரமஹம்ஸ. அப்பன் சடகோப ராமாநுஜஜீயர் ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர்
42 உத்தம நம்பி. சடகோபாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்
43 சேலம் K.M. வரதராஜுலு செட்டியார்
44 கோதை குட்டியப்பமாள், சிங்கப்பெருமாள் கோயில்
45 S. எதிராஜுலு நாயுடு, (Now) சீர்காழி
46 V. நாகப்ப பாகவதர், கரந்தை
47 B. A. நரஸிம்ஹாசாரியார், வண்டலூர்
48 திருவிந்தளூர் பரிமளரங்கநாத ஸ்வாமி தேவஸ்தான நிர்வாஹ அதிகாரி S. R. கோவிந்தராஜுலு அவர்கள்
49 R. பாஷ்ய சக்ரவர்த்தி ஸ்வாமி, Advocate, Trichi.
50 S. மணிவண்ணன், திருப்பத்தூர் (N.A.)

51 T. N. கிருஷ்ணய்யங்கார், வள்ளியூர்
52 வீணை. ரங்காசாரியர், உறையூர்
53 S. கிருஷ்ணய்யங்கார், திருநெல்வேலி
54 S. நாராயணையங்கார், சிகிரிக்கோட்டை
55 விரக்தி.ஸ்ரீநிவாஸாசாரியர், முஸரவாக்கம்
56 ஸ்ரீ. உ. வே. C. S. பார்த்தஸாரதி ஐயங்கார், B. A. B. L., தர்மகர்த்தா, திருவல்லிக்கேணி.
57 ஸ்ரீ. உ. வே. P. M. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி,ரிடைர்ட்ஜட்ஜ்,திருவல்லிக்கேணி
58 ஸ்ரீ. உ. வே. ஆசால் சேஷாசாரியர் ஸ்வாமி, Advocate, திருவல்லிக்கேணி
59 T. A. திருவேங்கடாசாரியார், மயிலை
60 V. V. Ramanujam (Reader) திருவல்லிக்கேணி
61 M.S. ரங்காசாரியார், திருவல்லிக்கேணி
62 T. N. ராமசாமி முதலியார், சிந்தாதிரிப்பேட்டை
63 M. R. சேஷாத்ரி ஐயங்கார், மண்ணடி
64 ஸ்ரீமதி விஜயவல்லியம்மாள், G. T.
65 T.R.கிருஷ்ணஸாமிஐயங்கார்,T.Nagar
66 G. அய்யாஹு நாயுடு, Madras 21
67 வித்வான் B. A. பாஷியமையங்கார், மாம்பலம்
68 ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார், Madras 24
69 துங்கம்பாக்கம். பக்தவத்ஸல நாயுடு
70 நுங்கம்பாக்கம் C. கிருஷ்ணஸ்வாமி
71 கோமடம் பார்த்தஸாரதி ஐயங்கார், Madras 21
72 A. Srinivasan, (Teacher) மாம்பலம்
73 B. P. புருஷோத்தம நாயுடு அவர்கள் (Tamil Reader) சிந்தாதிரிப்பேட்டை
74 அகரம் வரதாசாரி, B. A., T. Nagar
75 P. B. Singaracharian, Advocate, முத்தியால்பேட்டை.

— குறிப்பு —

1 மேலே குறித்த நபர்களில் சிலர் 1962ஆம் வருஷத்திற்கு சந்தா செலுத்தினவர்களாகவும் இருக்கக்கூடும். அன்னவர்கள் 63ஞ்சு சந்தாவை விரைவில் அனுப்புக.

2 63ஞ்த்துக்காகச் சந்தா செலுத்தினவர்களின் பெயர்கள் இந்த லிஸ்டில் விடுபட்டிருந்தால் அவர்கள் பணமனுப்பிய தேதியைக் குறிப்பிட்டு எழுத வேணுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்.

3 மதராஸ் மெம்பர்களில் சந்தா செலுத்திய சிலருடைய பெயர்கள் இதில் விடுபட்டிருக்கும். அது அடுத்த இதழில் வெளியாகும். மானேஜர்.

# ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் மஹோத்ஸவம்.

சென்ற இதழில் நாம் அறுபத்தோராவது நல்வார்த்தையாகத் தெரிவித்திருந்தபடி தேவப்பெருமாளுடைய பிரம்மோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்று முடிந்தது. ஸூர்யபகவானுடைய ஆதாபம் அதிகமாகத் தெரியாதபடி வருணபகவான் இடையிடையே தன்னுடைய கைங்கரியத்தை லகுவாகச் செய்து வந்தது குறிப்பிடத்தக்கது. புதிதாக நேர்ந்த ஒரு ஸம்பவத்தைப்பற்றியும் சிறிது தெரிவிக்க வேண்டியதாகிறது. பெருமாளை யெழுந்தருளப் பண்ணுகிற ஸ்ரீ பாதம் தாங்கிகள் தேவஸ்தான நிர்வாஹ அதிகாரியின் அபிப்பிராயத்திற்கு ஒத்துவாராததனால் உள்ளூர் வாஸிகளான அவர்களைவிட்டு வெளியூர்களிலிருந்து அந்தக் கைங்கரியபரர்களை வரவழைக்க நேரிட்டது. தினப்படி காலை மாலை இரு வேளைகளிலும் ஏறக்குறைய ஏழு மைல் தூரம் பெருமாள் எழுந்தருள வேண்டியிருப்பதனால் வழக்கமும் பழக்கமுமுடையவர்களுக்கன்றி மற்றையோர்க்கு இக்கைங்கரியம் ஸுலப ஸாத்யமாகாததலால் வெளியூர்களிலிருந்து வந்தவர்கள் ஸ்ரீ பாதம் தாங்கும் கைங்கர்யத்தை ஒழுங்காகச் செய்ய இயலவில்லை. இரண்டு நாள் காலம் தவறியே அகாலோத்ஸவமாகவே நடந்து வந்தது. மூன்றாம் திருநாள் கருடஸேவை காலை 5-மணிக்குக் கோவிலைவிட்டு வெளியேறிய பெருமாள் மாலை 5-மணிக்குத் தான் ஸன்னிதி திரும்பி வந்து சேர நேர்ந்தது. பக்தர்களின் உள்ளத்தில் ஏற்பட்ட குழப்பத்திற்கு அளவேயில்லை. இம்மஹோத்ஸவம்

எப்படி பூர்த்தியாகப் போகிறதென்று ஸகல ஜாதி பக்தர்களும் ஏங்கிக் கிடந்தார்கள். திருத்தேரின் கீழ்ப்பாகம் போன்ற தெருவடைத்தானென்னும் ஒரு யானத்தை வரவழைத்து, மூன்றாந்திருநாளிரவு அனுமந்த வாஹனமும், நாலாந்திருநாள் காலை சேஷவாஹனமும் அதில் நடத்திவைக்கப்பட்டது. ஆனால் சிலவூர்களிற்போல் மாடுகளைக் கட்டியிழுக்காமல் பக்தர்கள் வடம்பிடித்திழுக்கும் ஸந்நிவேசமிருந்தது. ஆனாலும் இதைத் தேவப்பெருமாள் உகந்தருளாமல் பழைய ஸ்ரீ பாதந் தாங்கிகளையே இணங்கச் செய்து உத்ஸவத்தை இனிது நிறைவேற்றிக் கொண்டார். திருத்தேர் 5, 6 மணி காலத்தில் நிலை சேர்ந்து அவபிரதம் திருவோணத்திலேயே தலைக்கட்டிற்று. ... .... (*)

---

## ஸ்ரீமந்நாதமுனிகள் மஹோத்ஸவம்.

நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்கு, ஆழ்வார்களுக்குப் பிறகு ப்ரதமப்ரவர்த்தகரான ஆசாரியர் ஸ்ரீமந்நாதமுனிகள். இவரும் இவருடைய திருப்பேரனாரான ஆளவந்தாரும் திருவவதரித்த ஸ்தலம் காட்டுமன்னார் ஸன்னிதி யென்கிற வீரநாராயணபுரம். இந்த ஸ்தலம் சிதம்பரத்திற்கு தென்மேற்கே 16 மைல் தூரத்திலுள்ளது. இத்தலத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கும் ஆளவந்தாருக்கும் வருஷத்திருநக்ஷத்ரோத்ஸவம் ஆண்டுதோறும் வெகு விபவமாக நடைபெற்று வருகின்றது. ஆனிமீ அனுடத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவவதாரம். ஆடிமீ உத்தராடத்தில் ஆளவந்தாருடைய திருவவதாரம.

ஸ்ரீமந்நாதமுனிகளின் மஹோத்ஸவம் ஸமீபித்திருக்கிறது. நிகழும் சோபக்ருத்வு இருபத்துநான்காம் பரிவ்ருத்தி அறபதாண்டு தொடக்கமென்கிற விசேஷமுள்ளது. அதாவது, இதுவரை இருபத்து மூன்று ஷஷ்டியப்தபூர்த்திகள் ஆய்விட்டன. இருபத்து நான்காவது ஷஷ்ட்யப்த பர்யாயம் ப்ராரம்பமாகிறது. இந்த விசேஷத்தை யுத்தேசித்து இவ்வருஷோத்ஸவம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுவதாகத் தெரிகிறது.

நாளது ஆனிமீ 9உ 23-6-63 ஞாயிற்றுக்கிழமையன்று திருப்பல்லாண்டு தொடக்கம். மறுநாள் (24—6—63 திங்கட்கிழமை) உத்ஸவாரம்பம். 3—7—63 புதன்கிழமை சாத்துமுறை. இவ்வுத்ஸவ நாட்களில் விசேஷப்படியாக வித்வத்ஸதஸ்ஸும் உபந்யாஸங்களும் நடத்த தர்மகர்த்தாக்கள் விசேஷமான முயற்சி செய்து வருகிறார்கள். எதுவும் த்ரவ்ய ஸாத்யமாயிருக்கையாலே பக்த பாகவதோத்தமர்கள் இயன்றளவு த்ரவ்ய ஸஹாயம் செய்து, உத்ஸவத்திற்கு வந்திருந்து அநுபவிக்கவும் வேணுமென்று தர்மகர்த்தாக்கள் ஆதரவோடு பிரார்த்திக்கிறார்கள்.

பல திவ்யதேசங்களிலிருந்தும் வித்வான்களையும் உபயவேதாதிகாரிகளையும் எழுந்தருளப்பண்ணி வெகு சிறப்பாக இம்மஹோத்ஸவத்தை நடத்தப் பாரித்திருக்கின்ற தர்மகர்த்தாக்களுக்கு அவரவர்கள் யதாசக்தி உத்ஸாஹவர்த்தநம் செய்வது மிகநன்று.

இதற்குப்பிறகு ஆளவந்தாருடைய மஹோத்ஸவம் ஆடிமாதத்தில் 10-ஆம் தேதி முதலாக 19-ஆம் தேதிவரைவாக (26—7—63 to 4—8—63) நடைபெறும்.

2

---

# நல்வார்த்தை நானூறு

(முன் தொடர்ச்சி.)

62. 'வித்வான்களாயுள்ளவர்களும் விமர்சமின்றிக்கே சொல்லிப் போரும் தவறான பாடங்களில் ஸ்தோத்ரரத்நத்தில் (18) *உல்லங்கித த்ரிவித ஸீம ச்லோகத்தில் "மாயாபலேந பவதாபி நிகூஹ்யமாநம்" என்பதொன்று. 'நிகுஹ்யமாநம்' என்று சொல்வடிவமுண்டே யொழிய நிகூஹ்யமாநமென்று கிடையாது, இங்கு गुकार த்தின் மேல் தீர்க்கம் வாராது. நிகூஹநம் என்கிற சொல்வடிவமிருப்பது கொண்டு நிகூஹ்யமாநமென்று தானிருக்க வேணுமென்று பலருடைய மயக்கம். குஹ்யம் என்றுள்ளதேயன்றி கூஹ்யம் என்றில்லையேயென்று அவர்கள் விமர்சிக்கவேண்டும். மறைக்கப்படுகிறது என்னும் பொருளில் गुह्यते, निगुह्यते (குஹ்யதே, நிகுஹ்யதே) என்னும் ரூபங்களே யுள்ளதனால் (நிகூஹ்யமாநம்) என்ன ப்ரஸக்தி கிடையாது. நிகுஹ்யமாநம் என்பதே ஸுபத்தமான பாடம்.

63. *தவாம்ருதஸ்யந்தினி ச்லோகத்தின் மூன்றும் பாதத்தில் "स्थितेऽरविन्दे" என்பது தான் யாவருமாதரித்த பாடம்; வியாக்கியாநங்களிலும் இப்பாடமே தான் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஜகந்நாத பண்டிதன் இந்த ச்லோகத்தை யெடுத்து பாடத் திருத்தம் காட்டுகிறான். 'ஸ்திதே அரவிந்தே' என்பது பொருந்தாதென்றும் (ஸ்திதோரவிந்தே) என்பது தான் பொருந்துமென்றும் அவனுடைய அபிப்ராயம்; பூர்வார்த்தத்தில் "தவ பாதபங்கஜே நிவேசிதாத்மா' என்றதற்குச் சேர "அரவிந்தே ஸ்தித: மதுவ்ரத:" என்பதுதான் பொருந்துமென்று கொண்டானவன். நம்மவர்களிலும் சிலர் ஆழ்ந்து நோக்காது இதுதான் ஸமஞ்ஜஸமான பாடமென்று பேசத் தலைப்பட்டிருக்கிறார்கள். (ஸ்திதோரவிந்தே) என்று பாடங்கொண்டால் ரஸபங்கமே யாகும். தாமரை மலரினுள்ளே யிருக்கின்ற வண்டானது முள்ளிப் பூவை ஒன்றாகக் கருதாது—என்கிற பொருளன்றோ இப்பாடத்தில் தேறுவது. இது சுவையற்றதே யாகும். வண்டுக்குத் தாமரை மலர் கிடைக்கவேண்டா; அம்மலர் உலகத்திலிருப்பதே போதுமானது; அஃது இருக்கும்போது அஸாரபானவற்றை நெஞ்சாலும் நினையாது என்பதே யிங்கு ஆசிரியர்க்கு விவக்ஷிதமாதலால் "ஸ்திதேரவிந்தே" என்கிற பாடந்தான் சுவைமிக்கதென்றுணர்க.

64. முதலியாண்டானென்னு மாசிரியர் ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம் போலச் சில வார்த்தைகள் அருளிச் செய்தாராம்; அவையாவன:— (1) பிராட்டிக்குச் சிறையிருப்புப் போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்தி லிருப்பு. (2) பிராட்டி இளைய பெருமாள் விஷயத்தில் அபசாரப்பட்டு உடனே பெருமாளைப் பிரியநேர்ந்ததுபோல, சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடி ஸம்பந்தத்தை விலகப் பண்ணும். (3) பிராட்டிக்கு அசோகவனம்போலே இவர்களுச்கு ப்ரக்ருதி ஸம்பந்த ரூபமான தேஹம். (4) பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம்போலே இவர்களுக்குப் புத்ர களத்ராதிகளின் ஸஹவாஸம். (5) பிராட்டிக்கு மாரீச மாயா மிருகக் காட்சிபோலே இவர்களுச்கு "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்னும்படியான விஷயங்களின் காட்சி. (6) பிராட்டிக்குத் திருவடி நேர்பட்டாப்போலே இவர்களுக்கு ஆசார்யன் நேர்படுவது. (7) பிராட்டிக்குத் திருவடி சொன்ன ஸ்ரீராமகுணங்கள்போலே இவர்களுக்கு ஆசார்ய னுபதேசிக்கும் பகவத் விஷயாதிகள். (8) பிராட்டிக்குத் திருவடி அடையாளங்கள் கூறித் திருவாழி

மோதிரம் கொடுத்ததுபோல இவர்களுக்கும் குருபரம்பரா பூர்வகமான திருமந்த்ரோப தேசம். (9) பிராட்டி திருவடிக்குச் சூடாமணி கொடுத்தாப்போல இவர்கள் ஆசார்யன் விஷயத்தில் *தலையல்லால் கைம்மாறிலேனே* என்றிருக்கு மிருப்பு. (10) பிராட்டிக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானது திருமகளாருடைய ஸஹவாஸமும் பேச்சும் தாரகமாயிருந்ததுபோல இவர்களுக்கு பாகவத ஸஹவாஸமும் அவர்களுடைய திவ்யஸூக்திகளுமே தாரகமா யிருக்கும். (11) பெருமாள் பிராட்டியிருந்த விடத்தே வந்து விரோதிகளைக் கிழங்கெடுத்து அவளைக் கைக்கொண்டதுபோல, எம்பெருமான் *ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலு ளழுந்தும் நாவாய்போல் பிறவிக் கடலுள் நின்று துளங்கு மிவர்களிடத்தேற வந்து *பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்புமாகிற விரோதிகளை வேரோடே களைந்து நித்யமுக்தர்களோடே ஒரு கோவையாக்கும்படி கைக்கொண்டருள்வது. இங்ஙனே மற்றும் பல பொருள்களுமருளிச்செய்வராம்.

65. பிராட்டி பெருமானை விட்டுப் பிரிந்து கடலிடைத் தீவில் இருந்து அலற்ற, மாருதி சென்று தேற்றிப் பெருமாளோடே சேர்ப்பித்த வரலாறு உற்றுநோக்கப்படின், எம்பெரு மானோடு இணைபிரியாமல் கூடிவாழ்வதற்கு இட்டுப் பிறந்த சேதநன் அவனை விட்டு விலகி ஸம்ஸார ஸாகரத்தினிடையே கிடந்தலற்ற, ஞானாநுஷ்டான மிவை நன்றாகவே உடைய னானவொரு ஆசாரியன் வந்து பகவத் விஷயத்தை புணர்த்தி இருவரையும் ஒன்று சேர்ப்ப தான ஸம்பிரதாய விருத்தாந்தம் நினைவுக்கு வரும். திருவடிக்கு ஸ்ரீராமாயணத்தில் ஆசாரிய ஸ்தானம் கிடைத்திருக்கின்றது. அந்தத் திருவடியின் தன்மையும் ஆசாரிய லக்ஷணமும் "பக்ஷீ ச சாகாநிலய:" என்னும் ஸ்ரீராமாயண சுலோகத்தில் மூதலிக்கப்படுகிறது.

66. ஸ்ரீராமாயணத்தில் ஸுந்தர காண்டத்தில் பிராட்டி அசோக வனத்தில் மிக மிக வருந்துவதைக் கூறுமிடத்து த்ரிஜடை யென்னு மரக்கியின் வார்த்தையால் சில சிறந்த விஷ யங்கள் தெரிவிக்கப்படுகின்றன. 23, 24 ஸர்க்கங்களில் ராக்ஷஸிகள் ஸீதா பிராட்டியை விரட்டுதலும் பிராட்டி ரோதனஞ் செய்வதும் கூறப்பட்டது. 25, 26 ஸர்க்கங்களில்— பிராட்டி ராக்ஷஸிகள் சொன்னவற்றைக் கண்டித்ததும் அசோக மரத்தின் கிளையைப் பற்றிக் கொண்டு வருந்தியதும் உயிரை மாய்த்துக்கொள்ள உறுதி கொண்டதும் சொல்லப்பட்டன. 27-ஆம் ஸர்க்கம் த்ரிஜடை தான் கண்ட கனவின் விருத்தாந்தத்தை ராக்ஷஸிகளுக்குச் சொல்லுவதாக அமைந்துள்ளது. பிராட்டி உயிரை விடுவதாகத் துணிந்து கூறின ரோஷ மான வார்த்தைகளைக் கேட்ட ராக்ஷஸிகளில் சிலர் அவ்விஷயத்தை இராவணனுக்குச் சொல்லப் போயினர். மற்றவர்கள் மீண்டும் சீதையை விரட்டிக்கொண்டிருந்தனர். அப்பொழுது தூங்கிக்கொண்டிருந்த த்ரிஜடையென்னு மரக்கி திடீரென்று விழித்தெழுந்து, சீதையைத் துன்புறுத்திக் கொண்டிருந்த அரக்கியரை நோக்கி 'நான் இப்போது ஒரு பயங்கரமான கனவு கண்டேன்: அது ராக்ஷஸர்களுக்கு விநாசத்தையும் இராமனுக்கு வெற்றியையும் தெரிவித்தது' என்று சொல்லிக் கனக்கண்ட செய்திகளையும் வெகு விரிவாகக் கூறி, இக்கனா விடியற்காலையில் ஏற்பட்டதால் இதில் கண்ட விஷயங்களனைத்தும் வெகு விரைவில் நிறைவேறு மென்பதில் ஐயமில்லை. ஆதலால் இனி நாம் சீதையை விரட்டுவது தகாத காரியம், இராவணனோடுகூட நமக்கும் விநாசம் நேர்ந்துவிடும்; நாம் சீதையினிடத் துப் பட்ட குற்றங்களை அவள் மன்னிக்கும்படி வேண்டிக் கொள்வதே நலம் என்று சொல்லிவிட்டு பிராட்டியின் திருமேனி புறுப்புகளில் தோன்றிக் காணப்பட்ட சுபக் குறிக

ளையும், மற்றும் பரம விலக்ஷணமான வொரு சுப சகுனத்தையும் தெரிவிக்கிறாள். இவ்வளவோடு அந்த இருபத்தேழாவது ஸர்க்கம் முடிவு பெற்றிருக்கின்றது. அந்த ஸர்க்கத்தின் முடிவிலுள்ள சுலோகம் ஸ்ரீராமாயணத்தின் ஸாரமான உட்கருத்தை வ்யங்க்ய மரியாதையினால் (व्यङ्ग्यमर्यादया) தெரிவிப்பதாக நம் ஆசாரியர்கள் நுட்பமாகக் காட்டியுள்ளார்கள். அது குறிக்கொள்ளத்தக்கது. அதுவே "பக்ஷீ ச சாகாநிலய:" என்று தொடங்கும் சுலோகம்.

67. ஸ்ரீராமாயணத்திற்கு மிகச் சிறந்த வியாக்கியானம் செய்த ஸ்ரீகோவிந்தராஜாசாரியரும் அவ்விடத்து வியாக்கியானத்தில் [வடமொழியினால்] ஸம்க்ஷேபமாக விவரித்துள்ளார். ஸ்ரீராமாயணத்தின் ஜீவநாடியான அவ் விசேஷார்த்தங்களைச் சில வார்த்தைகளினால் விளக்குகின்றேனிங்கு. ஸ்ரீராமாயணத்தில் இதே கட்டத்தில் தூதுவந்த திருவடி மரத்தின்மீது பதுங்கியிருப்பதாகிற செய்தியும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம் கூறுகின்ற நம் ஆசாரியர்கள் திருவடியை [ஆஞ்ஜநேயரை] ஆசார்ய ஸ்தானத்தில் வைத்துப் பேசுகின்றார்கள். **पक्षी च शाखानिलयः प्रहृष्टः पुनः पुनश्चोत्तमसान्त्ववादी । सुस्वागतां वाचमुदीरयानः पुनः पुनश्चोदयतीव हृष्टः ॥** [பக்ஷீ ச சாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட: புந: புநச்சோத்தம ஸாந்த்வவாதீ. ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந: புந:புநச் சோதயதீவ ஹ்ருஷ்ட:] பிராட்டி ப்ராண த்யாகத்தை நிச்சயித்துத் துயருற்றிருக்குங் காலத்திலே ஒரு சுப சகுனமானதாக இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதாயினும், அதே ஸமயத்தில் அங்குத் திருவடியும் வந்திருந்தபடியால் ஆசார்யஸ்தானீயனான அவனுடைய படியும் இதில் தெரிவிக்கப்படுகின்றதென்றுணரவேணும்.

68. [பக்ஷீ] இரு சிறகுகளையுடையதென்று பொருள். பறவையானது தனது இரண்டு சிறகுகளினாலும் எப்படி உயர்கதியையடைந்து நிற்கின்றதோ. அப்படியே ஞானமனுட்டானமென்னும் இரண்டு ஸாதனங்களினால் உச்சைர் கதியை யடையவல்லவன் ஆசாரியன்;

"சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞானகர்மங்களைச் சிறகென்று
குருஸ்ப்ரஹ்மசாரி புத்ரசிஷ்யஸ்தாநே பேசும்" (3–1.)

என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையும் இங்கே அநுஸந்தேயம். வழிநடந்து செல்ல வேண்டியவனுக்குக் கண்ணும் நன்றாகத் தெரியவேணும்; காலும் நடப்பதற்குப் பாங்காயிருக்கவேணும். குருடனும் நொண்டியுமானவன் வழி நடக்கவேணுமானால் கண் தெரிந்தவனும் கால்நலமுடையவனுமான வொருவனைத் துணைகொண்டேயாகவேணும். ஞானமற்ற ஆசாரியன் கண்ணில்லாத குருடனையொத்தவன்; அனுட்டானமற்ற ஆசாரியன் கால்நலமில்லாத நொண்டியையொத்தவன். ஆகவே ஆசாரியன் ஞானமனுட்டானமிவை நன்றாகவே உடையனாயிருக்கவேணும். இதனைப் பக்ஷீ என்கிற பதத்தினால் தெரிவித்ததாயிற்று.

69. [சாகாநிலய:] சாகையென்று கிளைக்குப் பெயராயிருப்பது போலே வேதத்திற்கும் பெயராம். யஜுச்சாகாத்யாயீ, ஸாமசாகாத்யாயீ என்று வழங்கி வருகிறோமல்லவா. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்றருளிச் செய்கையாலும், "ஆழ்வார்கள் வாழி யருளிச்செயல்வாழி" என்று மங்களாசாஸனம் செய்தருளுகிற மணவாளமாமுனிகள் 'செய்யமறைதன்னுடனேசேர்ந்து"என்றருளிச்செய்த வைக்கையாலும் ஆசாரியன் திவ்ய ப்ரபந்தாதிகளிற் போலே வேதத்திலும் நிரதனாயிருக்கவேணு

மென்று காட்டினபடி. "नावेदविन्मनुते तं बृहन्तम्" என்று வேதமே ஓதிவைத்தது. अवेदवित् तं बृहन्तं न मनुते—வேதமோதாதவன் பரமபுருஷனை அறியகில்லாதவனென்கை.

70. [ப்ரஹ்ருஷ்ட:] மிக்கமகிழ்ச்சியையுடையவனென்றுபொருள். ஆசாரியன் எப்போதும்ஸந்தோஷமேவடிவெடுத்த சிந்தையையுடையவனாயிருப்பன். ஆநந்தமயனான எம்பெருமானையே அநவரதம்சிந்தைசெய்வதனால் இவனும் ஆனந்தமயனாகவே ஆய்விடுவன். "திருமாலுருவோடு அவன் சின்னமே பிதற்றாநிற்பதோர் திருமால் தலைக்கொண்டநங்கட்கு எங்கே வரும் தீவினையே" என்கிற திருவிருத்தப் பாசுரமே நித்யாநுஸந்தானமாக இருக்கப்பெற்றவர்களிடத்தில் ஹர்ஷ ப்ரகர்ஷம்தவிர வேறொன்றுக்கு அவகாசமுண்டோ? தேஹயாத்திரையிலும் ஆத்ம யாத்திரையிலும் கவலையற்றிருப்பவர்களே ஆசார்யபதவிக்கு அர்ஹர்களாதலால் அன்னவர்கட்கு ப்ர ஹர்ஷமொழிய வேறில்லை.

71. [புந: புநச்ச உத்தமஸாந்த்வவாதீ] சிறந்த ஹிதோபதேசங்களுக்கு ஸாந்த்வ வாதமென்று பெயர். சிஷ்யர்களின் நிர்ப்பந்தத்திற்காக வன்றிக்கே தப்பேறாக அடுத்தடுத்து ஹிதோபதேசம் பண்ணுமவர் எவரோ அவரே உத்தமரான ஆசாரியர். திருக்கோட்டியூர் நம்பியைவிட எம்பெருமானார்க்குண்டான ஏற்றம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. [ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந:] ஸ்வாகதாம் என்றது ஸ்வஸ்மை ஆகதாம் என்றபடி. ஸுஷ்டு ஸ்வஸ்மை ஆகதாம்—ஸுஸ்வாகதாம். ஸ்வகபோல கல்பிதமான அர்த்தங்களை மனம் போனபடியே சொல்லுகையன்றிக்கே *முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமவரே உத்தமரான ஆசாரியராதலால் அதைத் தெரிவித்தபடி. [புந: புந: சோதயதீவ ஹ்ருஷ்ட:] "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்ற திருவாய்மொழிப் பாசுரப்படிக்கும், "स्खालित्ये शासितारम्—ஸ்காலித்யே சாஸிதாரம்" என்ற ந்யாஸ விம்சதிஸூக்திப்படிக்கும் தவறுகள் நேருங்காலங்களில் நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிப்பவரே உத்தமாசார்யராவர்; அதுவே இங்குப் பொருளாக விவக்ஷிதம். ஆக இந்தச்லோகம் உத்தமாசார்யருடைய படியையே தெரிவிப்பதாயிற்று. ... .... *

72. கம்பர் தமது இராமாயணத்தின் தொடக்கத்தில் திருவடிக்கு[ஆஞ்சனேயர்க்கு] காப்புச் செய்யுளொன்று இயற்றியுள்ளார். "அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே யொன்றைத்தாவி, அஞ்சிலே யொன்றாறாக ஆரியர்க்காகவேகி, அஞ்சிலே யொன்றுபெற்ற அணங்குகண்டயலாரூரில், அஞ்சிலேயொன்று வைத்தானவன் நம்மையளித்துக் காப்பான்" என்பது அச்செய்யுள். இச்செய்யுளில் "அஞ்சிலேயொன்று" என்கிற சொல்தொடர் ஐந்துமுறை வருகின்றது. நிலம் நீர் தீ கால் விண் [ப்ருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம்] என்கிற பஞ்சபூதங்களை யுத்தேசித்தே அஞ்சிலே யென்கிற சொல்லை ஐந்துமுறை பிரயோகித்திருக்கின்றார். வாயுபுத்திரனான அநுமான் கடலைத்தாவி ஆகாச மார்க்கமாகச் சென்று பூமிதேவியின் மகளான சீதாபிராட்டியைக் கண்டு இலங்கையில் தீயைவைத்து வந்தனன்; அன்னவன் நமக்குத் தஞ்சம்-என்பதே இச்செய்யுளில் தேறின பொருள். பஞ்சபூதங்களில் ஒன்றாகிய வாயு பெற்ற பிள்ளையாதலால் 'அஞ்சிலே யொன்றுபெற்றான்' என்பது அநுமானைத் தெரிவித்தது. அவன் கடந்து சென்ற கடலாகிய ஜலதத்துவம் பஞ்ச பூதங்களுள் ஒன்றாதலால் 'அஞ்சிலே யொன்றைத்தாவி' எனப்பட்டது. அவன் பறந்துசென்ற ஆகாசம் பஞ்ச பூதங்களுள் ஒன்றாதலால் 'அஞ்சிலே யொன்று ஆறாக' எனப்பட்டது. அவனால் காணப்பட்ட சீதையின் தாயாகிய பூமி பஞ்ச பூதங்களுள் ஒன்றாதலால் 'அஞ்சிலே யொன்றுபெற்ற

அணங்கு கண்டு' எனப்பட்டது. அவன் இலங்கையிலே வைத்த தீயானது பஞ்சபூதங்களில் ஒன்றாதலால் 'அயலாரூரில் அஞ்சிலே யொன்று வைத்தான்' எனப்பட்டது.

73. கம்பராமாயணவுரைகாரர்கள் மேலே விவரித்த வகையான பொருளையே யெழுதிவைத்துள்ளார்கள். கம்பராமாயணப் பிரசங்கிகளும் இப்பொருளையே சொல்லி வருகின்றார்கள். ஸ்ரீராமாயணத்தில் அனுமன் ஆசார்ய ஸ்தானம் வஹிப்பவராதலாலும், அவ்விஷயம் முன்னே பரக்க நிரூபிக்கப்பட்டதனாலும் அதற்குச் சேர இச் செய்யுளின் உள்ளுறை பொருளை நாம் உய்த்துணர வேண்டியது அவசியமாகிறது. இச்செய்யுளில் 'அஞ்சிலே' என்கிற சொல் ஐந்துதடவை வந்துள்ளது. அவ்வைந்துதடவைகளிலும் பஞ்சபூதங்களாகிற ஐந்து தான் பொருளாகக் கொள்ளப்பட்டது. உள்ளுறை பொருளில் அப்படியல்ல; முதலான அஞ்சு—பஞ்சஸம்ஸ்காரம். இரண்டாவதான அஞ்சு—அர்த்தபஞ்சகம். மூன்றாவதான அஞ்சு—உபாயபஞ்சகம். நான்காவதான அஞ்சு—பரத்வாதிபஞ்சகம். ஐந்தாவதான அஞ்சு—லோகபஞ்சகம். இங்ஙனம் பஞ்சகம் பஞ்சகமாகச் சொல்லப்படுகிற ஐந்து வர்க்கங்கள் ஜகத்ப்ரஸித்தமானவையே. ஸம்பிரதாய நூல்களில் பரிசயமுள்ளவர்கள் இவற்றை எளிதிலுணர்வர்கள். ஆயினும் அனைவர்க்கும் விளக்கமாக விவரிக்கிறோம்.

74. அஞ்சிலே ஒன்று பெற்றான். பஞ்சஸம்ஸ்காரங்களில் ஒன்றான மந்த்ர ஸம்ஸ்காரத்தினால் பிறவி பெற்றவன் என்றபடி. பிறவிஇருவகைப்படும்; உடற்பிறவி யென்றும் உயிர்ப்பிறவி யென்றும். உயிர் என்பது ஆத்மா; நித்யமான ஆத்மாவுக்குப் பிறவி யென்பது கிடையாதென்றும் உடலுக்குமட்டுமே பிறவியுள்ளதென்றும் கீதாசாஸ்த்ரம் முதலியவற்றில் அறுதியிடப்பட்டிருக்க, அதற்கு மாறாக உயிர்க்கும் பிறவியுள்ளதாகச் சொல்லுவது எங்ஙனம் எனில்; *असन्नेव स भवति । असद्ब्रह्मेति वेद चेत् । अस्ति ब्रह्मेति चेद्वेद । सन्तमेनं ततो विदुः* ॥ என்கிற உபநிஷத் வாக்யத்தின்படியும், *அன்று நான் பிறந்திலேன்* என்கிற திருமழிசைப்பிரானருளிச் செயலின்படியும் பிறவி உண்டாவதாகச் சொல்லக் குறையில்லை. "शरीरमेव मातापितरौ जनयतः । स हि विद्यातस्तं जनयति तच्छ्रेष्ठं जन्म ॥" என்கிற ஆபஸ்தம்ப தர்மஸூத்ரமும் உணரத்தக்கது. இந்த ஸூத்ரத்தின் பொருளாவது—தாய் தந்தையர் உடலை மட்டுமே பிறப்பிக்கின்றனர்; ஆசார்யனே வென்னில், ஞானத்தினால் ஆத்மாவைப் பிறப்பிக்கின்றனன். அப்பிறப்பே சிறந்தது என்பதாம். ஆசார்ய ஹ்ருதயத்தில் (2–35) "வித்யை தாயாகப் பெற்று" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்திலே—"*ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதி* என்கிறபடியே ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூப ஜ்ஞானத்தை யுண்டாக்கின போது இவ்வாத்ம ஸத்பாவமாகையாலே வித்யையை மாதாவாகக் கொண்டு இவ்வாத்ம வஸ்துவை ஜனிப்பித்து" என்று மணவாளமாமுனிகளருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம். ஆக அஞ்சிலே யொன்று பெற்றானென்றது — பஞ்சஸம்ஸ்காரங்களில் ஒன்றான மந்த்ர ஸம்ஸ்காரத்தினாலே பிறவி பெற்றவனென்றதாயிற்று. தாபஸம்ஸ்காரமான பிறகே மந்த்ரஸம்ஸ்காரத்திற்கு ப்ரஸக்தியாதலால் முதலதான அந்த ஸம்ஸ்காரத்தையே சொல்வதும் பொருந்தும். * தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச் சக்கரத்தின் கோயிற் பொறியாலே யொற்றுண்டு நின்று குடிகுடியாட் செய்கின்றோம்" என்கிறபடியே திருவாழி திருச்சங்கு திருவிலச்சினையினால் பிறவி பெற்றவன். திருமந்திரத்தினால் பிறவி பெற்றவன்—என்றதாயிற்று. நம் ஆசிரியர்கள் சிஷ்யர்களை ஆசீர்வதிக்கும்போது "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீர்" என்று அநுக்ரஹித்தருள்வதும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. .... ... ... (*)

75. [அஞ்சிலே ஒன்றைத் தாவி.] இப்போது அஞ்சிலே யென்றது அர்த்த பஞ்சகத்திலே யென்றபடி. முமுக்ஷுப்படியில் "அறியவேண்டு மர்த்தமெல்லாம் இதுக் குள்ளேயுண்டு; அதாவது அஞ்சர்த்தம்" என்றருளிச் செய்தார். பரமாத்ம ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் ஆகிய இவை யைந்தும் அர்த்தபஞ்சகமாக பகவச்சாஸ்த்ரத்திலே விவரிக்கப்பட்டுள்ளது. *மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் தக்கநெறியும் தடையாகித்தொக்கியலூழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்* என்கிற திருவாய் மொழித்தனியன் பாசுரம் அர்த்தபஞ்சகத்தை விவரித்துக்காட்டியிருப்பதோடு திருவாய் மொழியாயிரத்திற்கும் இவ்வைந்து பொருள்களே பிரமேயமென்றும் காட்டுகின்றது. இவற்றுள் ஒன்றைத் தாவுகையாவது— அர்த்தபஞ்சகத்தில் ஒன்றான விரோதி ஸ்வரூபத்தைக் கடத்தலாம். முமுக்ஷுப்படியில் "விரோதிதான் மூன்று; ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் ப்ராப்ய விரோதியும்" என்றருளிச் செய்யும்படியும், பட்டர் அஷ்டச்லோகியில், "मन्त्रब्रह्मणि मध्यमेन नमसा — மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா" என்கிற இரண்டாம் ச்லோகத்திலே நிரூபித்தருளினபடியும் அவசியம் களையவேண்டியவையாகத் தேறுகின்ற பிரதிபந்தகங்களைக் களைந்து—என்றதாயிற்று. அஹங்காரமமகாரஸ்பர்ச மற்றவராய். ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயரஹிதராய். எம்பெருமானுடைய போகத்திற்கு ஹாநியை விளைவியாதவராய் இருக்கு மிருப்பைச் சொல்லிற்றாயிற்று.

76. [அஞ்சிலே ஒன்று ஆறாக] உபாய பஞ்சகத்திலே ஆசார்யாபிமானமாகிற ஒன்றையே உபாயமாகக்கொண்டு என்றபடி. ஐந்து உபாயங்கள் எவையென்னில், கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம் ஆசார்யாபிமானம் என்னுமிவையேயாம். இவற்றில் நான்காவது உபாயமான ப்ரபத்தியில் இருவகையுண்டு; ஒன்று எம்பெருமானைப் பற்றுகை; மற்றொன்று ஆசாரியனைப் பற்றுகை. இவை தனித்தனி உபாயங்களல்ல; ஒன்றேயாம். ஸ்ரீ வசநபூஷண சரம ப்ரகரணத்தில் "ஈச்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோ பாதி; ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் காரியம் கொள்ளுமோ பாதி" என்றருளிச் செய்திருப்பது கொண்டு இது தெளியலாம். இந்த நாலாவது உபாயத்திற்கு மேல் ஐந்தாவது உபாயம் எது வென்னில்; ஆசார்யாபிமான மென்பது. ஸ்ரீவசநபூஷணத்தில் 443-ஆம் சூர்ணை முதல் இது வெகு விசதமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக் கொண்ட இவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லையென்று பிள்ளை பலகாலுமருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்" என்பது அங்கு தலையான சூர்ணிகை. ஸர்வேச்வரனானவன் "இவன் நமக்கு சேஷபூதன்; இவனை உஜ்ஜீவிக்கச் செய்வது நமக்கே பொறுப்பு" என்று அபிமானித்திருக்கையாகிற ஈச்வராபிமானத்தை இந்த சேதநன் தன்னுடைய அஹங்காரத்தாலே அழித்துக்கொள்ளுகிறான்; இப்படி ஈச்வராபிமானத்தை யழித்துக்கொண்டாலும் ஆசார்யாபிமானத்தை அழித்துக்கொள்ள முடியாது. ஏனென்றால், இவனுடைய துர்க்கதியே பற்றாசாக அங்கீகரித்து இவனுடைய உஜ்ஜீவனத்திற்கு க்ருஷி பண்ணிப் போருமவனான ஆசார்யன் 'இவன் நம்முடையவன், என்று அபிமானித்திருக்கு மபிமானத்தை ஒருகாலும் விடமுடியாது. பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவ உத்தர சதகத்தில் "त्वत्सर्वशक्तेरधिकाऽसदादेः कीटस्य शक्तिर्वत! रङ्गबन्धो। यत् त्वत्कृपामप्यति कोशकारन्यायादसौ नश्यति जीवनाशम्–த்வத் ஸர்வசக்தே ரதிகாஸ்மதாதே:

கிடஸ்ய சக்திர் பத! ரங்கபந்தோ. யத் த்வத்க்ருபாமபி இதி கோசகாரந்யாயாதயேள நச்யதி ஜீவகாசம்'' என்கிற ச்லோகத்தினால் சேதநன் ஈச்வராபிமானத்தைக் குலைத்துக் கொள்ளும் படியைக் காட்டியுள்ளார். ஆசார்யாபிமானம் இப்படிக்குலைத்துக்கொள்ளக்கூடியதன்று. அதுதான் மிகச் சிறந்த உபாயம். ஆக அஞ்சிலே ஒன்று—ஐந்து உபாயங்களிலே மிகச் சிறந்ததான ஆசார்யாபிமாநத்தை, ஆறு ஆக—உபாயமாகக்கொண்டு என்றதாயிற்று.

77. [அஞ்சிலே யொன்று பெற்ற அணங்கு கண்டு] பரம் வியூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சை என்னும்படியான எம்பெருமானது நிலைகள் ஐந்தினுள்ளே ஒன்றாயிருக்கப்பெற்ற அர்ச்சாவதாரத்தைக் காட்டிக்கொடுத்து என்றபடி. கண்டு என்றது பிறவினையில் வந்த தன்வினை; காணச்செய்து என்று பொருளாம். அணங்கு என்று தெய்வத்திற்குப் பெயர். பரமபத நிலயனாயிருக்குமிருப்பாகிய பரத்வமும். திருப்பாற்கடலில் ஸங்கர்ஷணாதிரூபேண வ்யூஹீபவித்து நிற்கும் நிலையாகிய வ்யூஹமும் தேச விப்ரக்ருஷ்டமாகையாலே இப்போது நமக்குப் பயன்படமாட்டா. மத்ஸ்ய கூர்ம வராஹ ராம க்ருஷ்ணாதிரூபேண அவதரிக்கையாகிற விபவாவதாரம் காலவிப்ரக்ருஷ்டமாகையாலே இதுவும் இப்போது நமக்குப் பயன்படமாட்டா. * अन्तः प्रविष्टः शास्ता जनानाम् *शास्ता विष्णुरशेषस्य जगतो यो हृदि स्थितः * இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே உள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியாமகனாயிருக்கு மிருப்பாகிய அந்தர்யாமித்வம் கரண விப்ரக்ருஷ்டமாகையாலே நமக்குப் பயன்படமாட்டா, *தமருகந்த தெவ்வுருவமவ்வுருவமாய்க் கொண்டு கோவில்களிலும் க்ருஹங்களிலு மெழுந்தருளி நிற்கும் நிலையாகிய அர்ச்சாவதாரமொன்றே இப்போது நம்போல்வார்க்கு உபஜீவ்யமாகையாலே இதுதன்னைக் காட்டிக்கொடுப்பதே ஆசார்ய க்ருத்யமாயிருக்குமென்க.

78. [அயலா ரூரி லஞ்சிலே யொன்று வைத்தான்] இங்கு 'அயலார்' என்பதை அவிவக்ஷிதமாக விட்டிடுவது. ஊரஞ்சிலே ஒன்றில் வைப்பது ஆசார்ய க்ருத்யம். இம் மண்ணுலகம், பாப பலாநுபவத்திற்கான நரகலோகம், புண்ய பலாநுபவத்திற்கான ஸ்வர்க்க லோகம், ஆத்மாநுபவ ஸ்தானமாகச் சொல்லப்படுகிற கைவல்ய லோகம். *நலமந்தமில்லதோர் நாடெனப்படுகிற பரமபதம் ஆகிய ஐந்து லோகங்களில் ஒன்றான பரமபதத்திற்கு ஆளாக்கித் திருத்திப் பணிகொள்வது ஆசார்ய க்ருத்யமென்க. *ஆதலால் பிறவி வேண்டேன்* இருள் தருமா ஞாலத்துளினிப் பிறவி யான் வேண்டேன்* என்கையாலே இம்மண்ணுலகம் ஹேயமாயிற்று. நரகம் ஹேயமென்னுமிடம் உபபாதிக்க வேண்டுவதன்று. ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே *स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः— ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:* எனப்படுதலால் ஸ்வர்க்கமும் ஹேயமாயிற்று. *आत्मानुभूतिरिति या किल मुक्तिरुक्ता, सर्वं तदूषजलजोषमहं जुषेय हस्त्यद्रिनाथ! तव दास्यमहारसज्ञः— ஆத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா. ஸர்வம் தத் ஊஷஜல ஜோஷமஹம் ஜுஷேய ஹஸ்த்யத்ரிநாத தவ தாஸ்யமஹா ரஸஜ்ஞ:* என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்திப்படியே கைவல்ய பதவியும் ஹேயமாயிற்று. ப்ரஹ்மாநந்த நிகேதனமான ஸ்தாநவிசேஷமொன்றே பரமப்ராப்யமாகையாலே அதுதன்னிலே கொண்டு சேர்த்து வைக்க உபதேசாதிகளாலே திருத்திப் பணிகொள்ளுமவனாயிற்று ஆசார்யன். ஆக, பஞ்சஸம்ஸ்காரம் பெற்று, ப்ரதிபந்தகங்களைக் கடந்து, சரமோபாயத்தைக் கடைப்பிடித்து, அர்ச்சாவதாரத்தைக் காட்டிக் கொடுத்து ஸம்ஸாராத் உத்தீர்ணனுக்கும் ஸதாசார்யனுடைய படிகளை இச்செய்யுளில் வெளியிட்டாராயிற்று.

.... ... ... (*)

# ஸர்வஜ்ஞலோககுரு ஸூக்தி ஸர்வஸ்வத்தில் ஏழாவதான நிகமனபரிச்சேதம்

116. பெரியவாச்சான்பிள்ளை முதலான ஆசார்யர்கள் அடிக்கடி ஸாதிக்கும் ஸ்ரீஸூக்தியொன்றுண்டு—"விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே" என்று. விரகர் நெடுஞ்சுவர்தள்ளும் விதம் கேண்மின். உபாயத்தை நன்கறிந்தவர்களுக்கு விரகர் என்று பெயர். ஒரு பெரிய சுவரைக்காட்டி இதை விரைவில் இடித்துத் தள்ளவேணும்' என்று ஸாதாரண மனிதர்களை வேண்டிக்கொண்டால் இவ்வளவு பெரிய சுவரை இடிப்பதென்றால் அதமபக்ஷம் நாலைந்து நாளாவது தேவைப்படுமே' என்பர்கள். வேலையில் கைவைத்தபின்பு அன்னவர்கள் பத்து நாட்களும் ஓட்டுவர்கள். விரகர்களோ வென்னில்; மர்மமாகச் சில விடங்களில் குத்திவிட்டு ஒரேக்ஷணத்தில் நெடுஞ்சுவரைத்தள்ளி விடுவர்கள். இதை ஆசாரியர்கள் நேரில் கடாக்ஷித்திருந்ததுபற்றியே 'விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே' என்னுமிந்த ஸ்ரீஸூக்தியையருளிச் செய்தனர். முமுக்ஷுப்படி சரமச்லோக ப்ரகரண சரமசூர்ணையின் வியாக்கியானத்திலும் இந்த ஸ்ரீஸூக்தியைக் காணலாம். அங்ஙனே நெடுஞ்சுவர் தள்ளுங் கணக்கிலே அமைகின்றது இந்த நிகமன பரிச்சேதம்.

117. த்ரௌபதியென்று ஒருத்தியிருந்தாளென்பதையும் அவளுடைய சரித்திரங்களையும் நாம் தெரிந்துகொள்வது மஹாபாரதத்தினால். எனினும், ஸம்ப்ரதாய ரீதியில் அவளுடைய பெருமைகளைத் தெரிவிக்கும் ப்ரபந்தங்களில் ஸ்ரீவசநபூஷணமொன்றுதான் தலைசிறந்தது. இந்த திவ்ய சாஸ்த்ரத்தில் த்ரௌபதியைப் பற்றிப் பல விடங்களில் ப்ரஸ்தாவமுள்ளது. அவற்றுள் மிகச் சிறந்தவிடம் ஒன்றேயாம். "புருஷகாரவைபவஞ்ச ஸாதநஸ்ய கௌரவம்" என்றும் "திருமாமகள் தன் சீரருளேற்றமும் திருமால் திருவடி சேர்வழி நன்மையும்" என்றும் அவதரித்துள்ள தனியன்களின்படி உபாய வைபவப்ரகரணம் இரண்டாவதாகும். அதுதான் ப்ரபத்தி ப்ரபாவமென்பது. அது தலைக்கட்டினவுடனே அதிகாரி சோதனம் ஆரம்பமாகிறது. என்பதாவது சூர்ணைக்கு அவதாரிகையிடும் மணவாளமாமுனிகள் "அனந்தரம் அதிகாரி சோதநம் பண்ணுகிறது" என்றிட்டருளினர். இங்கு மூல ஸ்ரீஸூக்தி யாதெனில்; "உபாயத்துக்குப் பிராட்டியையும் த்ரௌபதியையும் திருக்கண்ணமங்கையாண்டானையும் போலே யிருக்கவேணும்" என்பதாம். உபாயத்துக்கு அதிகாரியாம்போது சேதநன் இன்னபடியிருக்கவேணுமென்னுமிடத்தை நிரூபிக்கவந்த இந்த சூர்ணையிலே பிராட்டியோடொக்க த்ரௌபதியும் எடுத்துக் காட்டப்பட்டிருப்பதை ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் உற்று நோக்கவேணும். முமுக்ஷுப்படியின் முடிவிலே "வ்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம் ஆமத்தில் போஜனம்போலே" என்று வ்யதிரேகமுகேந அருளிச்செய்யப்பட்டஅர்த்தம் இங்கு அந்வயமுகேந அருளிச்செய்யப்பட்டது. ப்ரபத்திக்குத் தலையான அதிகாரமாகிய உபாயாத்யவஸாயம் பிராட்டிக்கும் த்ரௌபதிக்கும் குறையற்றிருந்ததாகக் காட்டி, பிராட்டிக்கும் த்ரௌபதிக்கும் வாசியை அடுத்த சூர்ணையிலே காட்டி, இவ்விருவரும் செய்தவற்றை அதற்கடுத்த சூர்ணையிலே காட்டியருளினர். பிராட்டியானவள் * ஶீதோ பவ * என்று நெருப்பை நீராக்கினாப்போலே * உஜ்ஜோ பவ * என்று விரோதிவர்க்கத்தை பஸ்மமாக்கித் தன்னை ரக்ஷித்துக் கொள்ளவல்ல சக்தியிருக்கச் செய்தேயும் 'நாயகரான பெருமாள் ரக்ஷிக்குமத்தனையல்லது நம்முடைய சக்தியால் நம்மை ரக்ஷித்துக் கொள்ளுகை நம் பாரதந்திரியத்துக்கு நாசகமென்று கொண்டு ஸ்வசக்தியாலே காரியம் கொள்ளாதொழிந்தாள் பிராட்டி. இனி த்ரௌபதி செய்ததோவென்னில்; துச்சாஸநன்

ஸபைநடுவே துகிலையுரிகிறவளவில் லஜ்ஜாவிஷ்டையாய்க் கொண்டு தானொரு தலையிடுக்குகை யன்றிக்கே இரண்டு கையும் விட்டாள். இது எல்லைகடந்த அத்யவஸாயத்தின் காரியம். இவ்விடத்தில் மணவாளமாமுனிகளின் அநர்க்கமான ஸ்ரீஸூக்திகாண்மின் ;—

"பிராட்டி பேரளவுடையாளாகையாலே அவள் பெருமாளே ரக்ஷகரென்று விச்வஸித்து ஸ்வசக்தியை விட்டிருக்கலாம். அத்தனை அளவின்றிக்கே யிருக்கச் செய்தே மஹா பத்தசையிலே 'இவ்வளவில் க்ருஷ்ணனே ரக்ஷகன்' என்று மஹா விச்வாஸம் பண்ணி மஹா ஸபா மத்யே இவள் லஜ்ஜையை விட்டதிறே அரிது."

என்று. இந்த ஸ்ரீஸூக்தியால் என்ன காட்டப்படுகிறது? ப்ரபத்திக்கு ப்ரயோஜனாபேக்ஷித மான ஸர்வஸ்வத்யாகத்தில் பிராட்டியைக் காட்டிலும் த்ரௌபதி மிகச்சிறந்தவளென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டது.

118. இப்படி எங்கும் ஏகமுகமாக ப்ரசம்ஸிக்கப்பட்ட த்ரௌபதியின் அத்யவஸாயத்திலே குறைகூறி, அநுவதிக்கவுந் தகாத ஸவசநங்கள் கூறுவார் யாவஜ்ஜீவமும் கூறிக் கொண்டிருக்க. த்ரௌபதிக்கு ஆபத்தசை யென்றும் மஹாபத்தசை யென்றும் இரண்டு. பாண்டவர்களோடொக்க அவள் பல்வகைக் கஷ்டங்களை யநுபவித்தது ஆபத்தசை. மஹா ஸபை நடுவிலே மான ஹாநியாம் ஸம்பவத்தை யநுபவித்தது மஹாபத் தசை. இந்த தசையிலே அவளுக்கு மானரக்ஷண மொன்றொழிய வேறெதுவும் அபேக்ஷிதமாயிருக்க ஔசித்ய லேசமுமில்லை. அபேக்ஷிதமான வதனை அவள் அடுத்த க்ஷணத்திலே பெற்று க்ருதார்த்தையானாள். அதுதான் ப்ரபத்தியின் பலன்; அதுதான் நாமஸங்கீர்த்தனத்தின் பலன். அதுதான் அத்யவஸாயத்தின் பலன். அதுதான் நிஷ்டா விசேஷத்தின் பலன். அதுதான் *கோவிந்த தாக நந்தத்தின் பலன். வேறு சில பலன்களையும் அவள் விரும்பி யிருந்தாளென்றும், அவற்றை அப்போதே பெறாதது ப்ரபத்தியின் குறையினாலென்றும், வேறொரு ப்ரபத்தியின் பலனாக அவற்றைக் காலாந்தரத்தில் பெற்றாளென்றும் தோன்றியுள்ள சரணாகதிதங்கள் சரணே சரணாநகரம் இடையறாது நிகழ்ந்திடுக.

119. ரஜஸ்வலையாயிருந்த த்ரௌபதி அந்த நிலைமையிலே கண்ணபிரானை நேரில் காணவிரும்பி யிருந்தாளென்றும், அந்த விருப்பம் நிறைவேறவில்லையன்றோ வென்றுப், ஆதலால் ப்ரபத்தி பழுதுபட்டுவிட்டதென்று இசைந்து தீரவேண்டிய தென்றும் கூறுவார் இந்த அச்லீலத்தை எப்படித்தான் கூறுகின்றார்களோ? * மதஜொகெ நவ வணித: * என்று கேட்டிருந்த வொரு ஜாமாதா, தான் கற்ற சதச்லோகியில் * த்ரஷ்டாஜ்ஞா ந்லஷாயதாம் ம்ஸம் ம்ஸாஸெவது * என்றச்லோகத்தைச் சிந்தனை செய்திருந்து மாமியாரகத்திற்கு வந்தானாம். அப்போது மாமியார் ரஜஸ்வலையாய் புறழக்கடையில் நிற்க, ஓடிச்சென்று 'அம்மாமீ தாஸன்' என்றானாம். உடனே மாமனாரைத் தேடிச்சென்று அவர் பாஹ்யஷகியி லிருக்கக்கண்டு 'மாமா தாஸன்' என்றானாம். த்ரஷ்டாஜ்ஞா ந்லஷாயதாம் என்றதன்றோ சாஸ்த்ரம் என்று ஒவ்வொருவரிடமும் சொல்லிக்கொண்டு திரிந்தானாம். அப்படிப்பட்ட சமத்தனாகக் கண்ணபிரானைகவில்லை யந்தோ!.

120. * சங்க சக்ர கதாபாணே! * இத்யாதி ச்லோகத்தை வியாக்கியானித்தருளா நின்ற பெரியவாச்சான்பிள்ளை த்ரௌபதிக்குப் பல அபேக்ஷிதங்களிருந்ததாகக் காட்டி யருளுகிறாரென்றும், அவ்வபேக்ஷிதங்கள் இந்த ப்ரபத்தியினால் நிறைவேறவில்லையென்பது அசைக்கமுடியாதது தானே யென்றும் கூறுமவர்கள் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கி

